உ



ஸ்ரீ கணேசாயநம:

# விநாயகப்ரபாவம்.

இது.

யாழ்ப்பாணத்து-நல்லூர்

உபயவேதாகம பண்டிதர்

ப்ரம்ஹ ஸ்ரீ

**வே. கநகசபாபதி ஐயரவர்கள்**

கொழும்புச்

சைவபரிபாலன சபையிற் செய்த

பிரசங்கம்.

கொழும்பு நகரத்தில்

சிறை வர்த்தகப் பிரதிநிதியாய் விளங்கும்

நவாலி ஸ்ரீமான்.

**ம. சிவப்பிரகாசம் அவர்கள்**

தருமப்பிரசுரம்

STAR PRESS,

தாரகா அச்சியந்திரசாலை கொழும்பு.

உ

ஸ்ரீ கணேசாயநம:

"சுக்லாம் பாதரம் விஷ்ணும்
சசிவர்ணஞ் சதுர்ப்புஜம்
ப்ரஸந்நவதநம் த்யாயேத்
ஸர்வவிக்நோப சாந்தயே"

வெள்ளை வஸ்திரதாரியாய், எங்கும் (இடையீடின்றி) வியாபித்தவராய், சந்திரனைப்போன்ற வர்ண முடையவராய், நான்கு புஜங்களுடையவராய், ப்ரத்தியக்ஷ முகமுடையவராய் இருக்கும் விநாயகக்கடவுளை (நானிப்போது ஆரம்பிக்குங் கருமத்திற்கு வரும்) சகலவிக்கினங்களையும் நீக்குவதற்காகப் பிரார்த்திக்கின்றேன்.

விநாயகக்கடவுள் வெள்ளை வஸ்திரதாரியென்பதை நோக்கியே ஔவையாரும் விநாயகரகவலில் "பூந்துகிலாடையும்" என்றெடுத் தருளிச்செய்தார். துகில் என்றாலும் ஆடை என்றாலும் பொதுவாக வஸ்திரத்தையேகுறிக்குமாயினும் முன் வந்த "துகில்" வெண்மையையேஉணர்த்தும். இதுசிந்தாமணியுரையுட்கண்டது. நக்கீரரும், அகவலில் "மின்னுமேனவே விளங்குபட்டழகும்" என்றுகூறினர். மின்னல் வெண்ணிறம், (அதுதர்க்கநூலார் கருத்து) அதுபோலவிளங்கும் வெண்பட்டென்பதாம். பட்டினது இயல்பானநிறம் வெண்மையேயாம்.

விஷ்ணும்:— பிரமா விஷ்ணு முதலியதேவர்களைப் போலந்தத்தம் எல்லைக்குட்பட்ட வியாபகமின்றி "ப்ரதிவ்யோபவ:" எனத்தொடங்கிய சுருதிப்படி சர்வசேதனசேதனங்களிடத்தும் நீக்கமற நிறைந்துநிற்கும் எல்லைக்குட்படாத வியாபி என்பதாம்.

சசிவர்ணம்:— ஞானஸ்வரூபி யென்பதை யுணர்த்தும், வெண்மை ஞானத்துக்கும் சுகத்திற்கும் இருப்பிடம் எனச் சங்கரசங்கிதை கூறிற்று. "த்வம்சின்மய:" என்றும், "த்வம்க்

ஞானமய:" என்றும் கணபதி உபநிஷத்துங்கூறிற்று. விநாயக க்கடவுள் ஆன்மாக்கள்பொருட்டு எண்ணிறந்த அருண்மூர்த் தங்கள் கொண்டு திருவிளையாடல்கள் புரிந்தருளினராதலின் இன்னும் வேறுபல நிறத்திருமேனிகளும் அப்பெருமானுக் குச்சாத்திரங்கள் கூறின. ,,நெஞ்சிற்குடிகொண்ட நீலமேனியும்" (ஔவையார்)"செக்கர்மேனிவிநாயகனே"(அதிராவடிகள்)"செந் தீயினொளிய முருக்கொண்டதென்னே" (நம்பியாண்டார் நம்பி) சோதி ரூபம், ஸ்படிக வர்ணம், குங்கும வர்ணம், நீல வர்ணம், (பார்க்கவபுராணம்) இந்நிறங்களுள்ள மூர்த்திகளாகக் கூறிய து முக்குணங்களுடைய மும்மூர்த்திகளுள் நின்று முத்தொ ழில் நடத்துதல்பற்றி யேயாம்.

ப்ரசந்நவதனம்:— பிரத்தியக்ஷமுகம் என்றபடி "த்வமே வப்ரத்யக்ஷம்" என்றும் "த்வம்ப்ரத்தியக்ஷம்—ப்ர்ம்ஹாஸி" என் பதும் சுருதி. தக்ஷிணாமூர்த்தி உபநிஷத்தில் "முத்ராபுஸ்துகவந் ஹி நாகவிலஸத்பாகும்ப்ரசந்நாநநம்" என்பதிலுள்ள "ப்ரசந்நாநந ம்" என்பது மிக்கருத்தாதலறிக. "ப்ரசந்நோமத்தவாரண:" என்னும் நிகண்டுநோக்கிப் "ப்ரசந்நவதநம்" என்பதற்கு யானை முகமெனினுமாம். இக்கருத்து நோக்கியே "ஒருகோடுமுகத் தணிந்த பிரசன்னவிநாயகனை" என்றார் பார்க்கவ புராணமுடை யாரும்,

த்யாயேத்:— தியான மார்க்கத்தால் உபாசிக்கும் வஸ்து வைச் சுட்டிற்று, "த்வாம்யோகிநோத்யாயந்தி நித்யம்" என்றும், "ஏவம்த்யாயதியோநித்தியம்" என்றும் சுருதி மூழங்கியது மி துவேயாம்,

சர்வவிக்நோபசாந்தயே:— சர்வவிக்கினங்களையும் நீக்குபவர் என்பதனைக்காட்டிற்று வேதமும் "ஏகதந்தாய விக்நவிநாசிநேசிவ சுதாயவரதமூர்த்தயே நமோநம: என்று கூறிற்று

---

அகண்டாகாரநித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பா கிய பரப்பிரமம் (சிவபெருமான்) ஆன்மாக்களுக்கு அருள்செ ய்யும்பொருட்டுக் கொண்டருளிய மூர்த்தங்கள் பல அவற் றுள், விநாயக மூர்த்தமே மிகச்சிறந்ததாம். என்னை எனின், தனக்கொருதலைவனையுடையோன் கடவுளாதல் பொருந்தாது

இவர்க்கு ஒரு தலைவர் இலர் என்பது விநாயகர் என்னுந்திரு நாமத்தாலினிது பெறப்பட்டது. இனி, விநாயகர் என்னுஞ் சொற்பொருளை விரிக்குங்கால், வி, என்பது பல பொருள் காட்டும் ஒருபசர்க்கம், ஆகவே.

வி = மேலான, நாயகர் = தலைவர் எனப் பொருள்பட்டுத் தனக்கொரு தலைவரை வேண்டாது தலைவர் எனப்படுவார்க் கெல்லாம் தனிப்பெருந் தலைமைப்பதி, தாமேயாய் விளங்கு பவர்.

வி = கல்வி, நாயகர் = தலைவர் எனவே, தன்னையடுத்தார்க் குக் கல்வியைத் தருபவர்.

வி = கண், கண்ணிற்சிறந்த உறுப்பில்லாமைபோலத் த ன்னிற்சிறந்த தலைவரில்லாதவர்.

வி = அறிவு ஆகாசம் என்பனவாகலின் சடாகாசமாகாது சிதாகாசமெனப் பெறப்பட்டு அச்சிதாகாசத்தலைவர். (இத னைக் "கம்கணபதயே" என்னும் மந்திரத்தானு முணர்க) தன் னின் மேலான நாயகரில்லாதவர், துட்டர்களையும் இடையூறு களையுங் கண்டிப்போர் என வேறுபொருள் கூறுவாருமுளர். கணபதிஎன்னும் பெயரும் அதனை வலியுறுத்தும். எவ்வா றெனின் கணங்கள் = பலவேறு கூட்டங்கள். அவை பிரமக கணம், தேவகணம், யக்ஷகணம், ராக்ஷசகணம், அசுரகணம், பூதகணம், பிசாசகணம மனுஷகணம் முதலாயின இவ்வெல் லாக் கணங்கட்கும் பதியாதலையே காட்டிற்று.

விநாயகக்கடவுள் பிரணவ மகாமந்திரத்தினின்றும் சக ளிகரித் தருளினமையால் பிரணவஸ்வரூபர் என்று கூறப்பட் டார். "ஓம்கணுதீந் பூர்வமுச்சார்யவர்ணுதீந்—ததநந்தரம் அநுஸ் வார: பரதர அர்த்தேந்து லசிதம்ததா—தாரேணயுக்தமேத தேவதா மநு ஸ்வரூபம்-கசார: பூர்வரூபம்—அகாரோமத்யரூபம் —அநுஸ்வாரச் சாந் த்ய ரூபம்—பிந்து ருத்தர ரூபம் நாதஸ்ஸந்தாநம்" என்று கூறிப்பி ரணவம் விநாயகக்கடவுளே என்று வேதம்முழங்கிற்று. பர ப்பிரமமும் (சிவபெருமான்) பிரணவமும் ஒன்றே என்று, மாண்டூக்கியம், சுவேதாசுவதரம், தைத்திரீயம், முண்டகம், ப்ரச்நம், கடம், ப்ரகதாரண்யகம், சாந்தோக்யமமுதலிய உப

நிஷத்துக்கள் விரித்துக்கூறின. இக்கருத்துட்கொண்டே பஞ்சருத்திரத்திற் சேர்ந்த அதர்வசிகை, அதர்வசிரம் ஆகிய உபநிஷத்துக்கள் பிரணவத்தைச் சிவநாமங்களால் ஓங்காரம், தாரகம், சர்வவ்யாபி, அநந்தம், தாரம் சூக்ஷுமம், சுக்லம், வைத்யுதம், ஏகன், ஏகருத்ரன், ஈசானன், பகவான், மஹேச்வரன், மஹாதேவன், ப்ரளயம, விஷ்ணு ப்ர்மஹம். ப்ரகாசம் முதலிவற்றாற் கூறிச்சென்றன. அதுமட்டோ ஜாபாலோபநிஷத்து மிதனை வலியுறுத்தும்.

இக்கடவுள் சிவபெருமானின் வேறாகாத ஓம் என்னும் மஹாமனுவினின்றும், பூதாங்கம், தேவாங்கம, மருகாங்கம என்னும் மூன்றங்கங்களுடன் பிரணவ சொரூபியாய்த் தோன்றினர் என்பது சரித்திரம்.

அத்திருமுகத்தை நோக்குங்கால் ஒருபக்கம் தந்தமாகிய கொம்புகாணப்படுதலின், ஆண்வடிவென்றும், ஒருபக்கம் அத்தந்தம்காணப்படாமையின் பெண்வடிவென்றும்காட்டிநிற்க ஆண்பாலா? பெண்பாலா? என்பார்க்கு எப்பாலுங்கடந்த அப்பாலுக் கப்பாலுக் கப்பலாய் நிற்பதை யுணர்த்தும். அம மட்டோ! உயர்திணையா? அஃறிணையா? என்பார்க்கு அவ்விருதிணைத் தோற்றமும தம்பால் கீழ்மேலாக மாறிக்காட்டுதலின், இத்திணையதென எவராலும வரையறுத்துச் சொல்லப்படாத எழில்நலங்களையுடைய ஒரு பெரும்பதி யென்பதையே சுட்டும்.

விநாயகமூர்த்தியின் திருமேனி நமது அசுத்ததேகம்போல, தோல் இரத்தம் மாமிசம்முதலியவற்றா லாக்கப்பட்டதன்று, அருட்டிருமேனியேயாம். அருளே சத்தியாதலால் சத்தித்திருமேனியெனலும ம். அதுபற்றியே "த்வம்குணத்ரயாதீத:" எனவும் "த்வம்தேஹத்ரயாதீத:" எனவும் சுருதிகூறிற்று. திரிகுணங்கள் மாயையிற்காரியமாயுள்ளன அவற்றோடினப்படுத்திக் கூறிய தேஹத்ரயங்களும அம்மாயையிற் காரியப்பட்டனவேயாம். மாயாகுணங்களும் மாயா உருவங்களும் பாவிடங்கூறுதல குற்றமாதலால் சுருதியிற் போந்த "குணாதீத-தேஹாதீத" தர்மங்கள் கணேசப் பிரமத்தில் நிலையாயின. இனி, அக்கினிசத்தி ஒன்றாகிய வழியும், சுடப்படுவதும் விளக்க

ப்படுவதும் அடப்படுவதுமாகிய விஷயத்தில் சூடுவிளக்கம் அடுதலாகிய தொழிலினால் பலவாதல்போல, விநாயகக்கடவுளின் சத்தி ஒன்றாகியவழியும் கிர்த்யபேதத்தால் இச்சாசத்தி கிரியாசத்தி ஞானசத்தி என மூவகைப்படும். அவற்றுள், இச்சாசத்தியாவது:— ஆன்மாக்களை முத்தியிலடைவிக்க விரும்புதல். கிரியாசத்தியாவது:— அவ்வான்மாக்களுக்குக் கர்மசமத்துவம்பிறக்கும்பொருட்டு அக்கர்மங்களைப் பக்குவா பக்குவமறிந்து கூட்டிப்புசிப்பித்துத் தொலைப்பித்தல். ஞானசத்தியாவது:— அக்கர்மங்களையும் அக்கர்மங்களுக்கீடாகிய தநுகரண புவனபோகங்களை உபாதானத் திரயத்தினின்றுந் தோற்றுவிக்குமுறையுமறிதல். விநாயகக்கடவுளுக்கு இம்மூன்று சத்திகளும் முறையே வல்லபை அம்மை, சித்தி அம்மை, புத்தி அம்மையுமேயாம். "த்வம்சக்தித்ரயாத்மக:" என்றது மிது.

விநாயகமூர்த்தியினுடைய அங்கப்ரத்யங்க சாங்கமுபாங்க மனைத்தும் அருள்வடிவே என்பது சுருதிசம்மதமாதலின் அவற்றுட் சிலகாட்டுகின்றாம்.

## யானைமுகங் கொண்டது.

பிரணவப்பொருள் தாமேயென்பது. பிள்ளையார் சுழியுமிதனை நிறுத்தும். எங்ஙனமெனின், பிள்ளையார் சுழி என்பது உலகிலொவ்வொருவரும் ஒருவிஷயமெழுதத் தொடங்கும்போது தலைப்பில் எழுதும் (௳) இதுவாம். இதனை "ப்ரதமம் பிந்துஸம்யுக்தம்—த்விதீயம் தண்டமுச்யதே" என்று பரமாப்தவாக்கியம் சொல்லுகின்றது முதல் பிந்துவென்பது (o) என்னும் வட்டவடிவு. இரண்டாவது தண்டமென்பது (—) என்னுங் கீற்று வடிவமாம். இவற்றுள், முன்னையது பிந்துவும் பின்னையது நாதமுமாம் இரண்டுஞ் சேர்ந்தே பிள்ளையார் சுழியாம். இதனை, ஊமையெழுத்து, மௌனாக்ஷரம், மௌனக்குறி என்பர் 'மோனமேகுறியதாய் முதலெழுத்தருளிய ஞானமார் மதலை" என்பது கந்தபுராணம். இப்பிள்ளையார்சுழியில் பிந்து, அர்த்த சந்திராகிர்தி, தண்டாகிர்தி என மூன்றங்கமுண்டென்பாருமுளர் யானைக்கு கஜ: என்று பெயர். கச்சதி ஜாயதே அநேநேதிகஜ: க-கச்சதி-லயம். ஜ-ஜாயதே-சிருட்டி இதுவே கஜாநநத்தின் பொருள் என்பர் சிலர். யானைத்

தலையோடு சேர்ந்ததுதிக்கையிலே பிரணவத்தை அமைத்துக் காட்டுவர் பெரியோர்.

## சடை முடி தரித்திருத்தல்.

வேதாந்தப் பொருள் தாமே என்பது. யோகிகளால் நித்தியமுந் தியானிக்கப்படுபவர்என்பதுமாம். "த்வாம்யோகி நோத்யாயந்திநித்யம்" என்று கணபத்யுபநிஷத்தும் முழங்கிற்று

## முக்கண் கொண்டது.

ஆதித்தன், சந்திரன், அக்கி என்னும் முச்சுடர்களையுங் கண்களாகக்கொண்டு அவைகட்கு ஜோதிகொடுத்து நிற்பவர். காயத்திரி மந்திரத்தின் மூன்றுபாதங்களின் பொருள் என்பதுமாம.

## மும்மதம்

இச்சா ஞானக்கிரியைகளை யுடையோர். சச்சிதாநந்த முடையோர் என்பதுமாம்.

## பரந்தசெவியுடைமை

நிரவதிசர்வக்ஞத்துவமுடையர்என்பது.

## ஒருகோம்புடைமை.

பரஞானபதி என்பதாம்

## ஒடித்தகோம்புடைமை.

அபயப்பிரதானமுடையரென்பது

## ஐந்துகரங்கொண்டது

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல் அருளல் என்னும் பஞ்சகிருத்தியபதி என்பது. அளப்பிலாற்றலுடையரென்பதுமாம.

## பாலசந்திரனை அணிந்தது

உண்மையடியாரை உயர்நிலைக்குய்ப்பதையும்; ஞானவடிவினையுடையர் என்பதையும் சர்வஞ்ஞத்துவர் என்பதையும் குறிப்பது.

## உபவீதந்தரித்தமை

பரப்பிரமம் தானே என்பது. ப்ராம்ஹணர்தானேஎன்பதுமாம்.

## சர்ப்பாபரண மணிந்தது.

குண்டலி சத்திபாம்பு வடிவமெனக் கூறப்படவானும், அது அவர்க்குரித்தாதலுண்மையானும், அவைகளுடைய விரிவு சுருக்கங்களே பிரபஞ்சத் தோற்ற ஒடுக்கங்களாகையானும அதனையுடைய ராயிருத்தலால் ஜகத்திற்கு நிமித்தகாரணர் என்பது. "ஸர்வம் ஜகமிதம் த்வத்தோ ஜாயதே ஸர்வம் ஜசமிதம் த்வயிலயமேஷ்யதி" என்பதோக்து. இதுவன்றி "இருதக்யே நாகரூபம்" எனக் கூறலால் "இருத்தி" என்பதற்கு நல்ல செல்வம், ஐச்வர்யம், மேலாந்தன்மை என்பனவாதலின் இவைகளையுடையர் என்பதுமாம்.

## துதிக்கை யுடைமை

அணுவுக்கணுவாய் மகத்துக்கு மஹத்தாயுள்ளவர் என்பது.

## மோதகமேந்தியது

ஜகத்தும் அதிலுள்ள சேதன சேதனங்களுந் தன்னிடத் தடங்கின என்பது. "சர்வம் ஜகமிதம்த்வத்தஸ்திஷ்டதி" என்பது சுருதி. இம்மோதகம ஆயிரத்தால் பூசிக்கின் அவ்வாறு பூசித்தோர் விரும்பியபிரயோஜனங்களை அடைவர்என்று வேதசிரசு கூறிற்று. "யோமோதக ஸஹஸ்ரேணயஜதிஸவாஞ்சித பலமவாப்நோதி"

## லம்போதர முடைமை.

சர்வ ஜீவோற்பத்திக்கும் கர்ப்பஸ்தானமாயுள்ளவர் என்பது.

## அறுகுசூடியது.

சர்வாந்தரியாமி என்பது. மலப்பிணியின் உஷ்ணத்தைக்குறைப்பவர் என்பதுமாம். இவ்வறுகு விநாயகமூர்த்தியை பூசித்தற்கு மிக விசேஷமாம். வேதமும் "யோதூர்வாங்குரைர்

யஜதி" என்றுகூறிற்று. வன்னிப்பத்திரமும், மந்தாரைமலரும் விநாயகமூர்த்திக்கு மிக்கவிருப்புடையன, இவற்றின் விரிவைப்பார்க்கவ புராணத்துட்காணக

## பெண்ஆண் அலிஉயர்திணை அஃறிணை வடிவானது

அவள் அவன் அதுவாய் நிற்கும் உலகிலுள்ள எவர்க்கும் எவைக்கும் பொதுநிலையர் என்பது

## மூஷிகவாகனங்கொண்டது

வண்ணமும் வடிவுங்காட்டாப் பேரிருளாகிய ஆணவ மலமே ஈண்டுவண்ணமும வடிவுங்காட்டி வந்த மூஷிகமாகவும் அம்மூஷிகமாகிய ஆணவமலம பாற்கடலிற்றோன்றிய விஷம் பரமபதியின் திருமிடற்றிலடங்கி வலிகெட்டு முதல் கெடாது நின்றதுபோல, பிரணவமூர்த்தியின் அடிக்கீழடூந்தித் தன்வலிகெட்டு நின்றதுஎன்பது. இன்னும் விரிக்கிற்பெருகும்

விநாயகமூர்த்தியின் திருவருளின்றி எக்காரியமேனும் நிர்விக்கினமாக முற்றுப்பெறாதென்பதே வேதசம்மதம். அம்மூர்த்தியின் மகிமைகளும், பூஜாக்கிரமங்களும், விரதாநுஷ்டானக்கிரமங்களும் பிறவும் விரிந்தநூல்களுட்காண்க.

வேதத்தில் பிரஸ்தானமாகவிளங்கும எசுர் வேதத்தின் மத்தியிலுள்ள ஸ்ரீருத்திரத்தில் "கணேப்யோ கணபதிப் யச்ச வோநமோநம:" என்று கணங்களுக்கும் கணபதிக்கும் நமஸ்காரம் கூறப்பட்டது. கணபதி காயத்ரி மந்திரம் கிரிஷ்ண எசுர் வேதம். அஉ-வது ப்ரச்னத்திற் கூறியிருக்கின்றது. இம்மூர்த்தியினது "கணாநாந்துவா" என்னும மந்திரம் மூன்று வேதங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது. கணபத்யுபநிஷத் விக்நஹராசிதை காணபத ப்ரஹ்மவித்யை முதலியன வேதாந்தத்துள்ளன. இத்தக்கணேச மூர்த்தியை வேதாகமபுராணங்கள் நித்யர் ஸர்வகாரணர், பகவர், புருஷர், ஸர்வாந்தர்யாமி, ஸர்வோபாஸ்யர், ஸர்வ நமஸ்கார யோக்யர், பசுபதி, தத்வாதிதர், குணாதீதர், விஸ்வாதிகர்; விச்வசேவ்யர், விச்வரூபி, விச்வகாரணர், பரபிரமம், அஷ்டமூர்த்தி, ஸ்வதந்திரர், நிர்மலர் நிராமயர், தற்பரர், சுயம்பு, ஞானஸ்வரூபி, பிரமா, விஷ்ணு,

ருத்ரர் சிவன், ஊர்த்துவவீர்யர், ஸர்வவிக்நவிநாசனர், சச்சிதாநந்தமயர் என்பன முதலாகப் பலகூறின.

விநாயகக்கடவுள் கைலாசமலையிலே ஆவணிமாதத்தில் வருகின்ற பூர்வபக்ஷச்சதுர்த்தியில், பிரமாதிதேவர்கள் சமர்ப்பித்த இக்ஷு, தேஙகாய் [விநாயககடவுளுக்குத் தேங்காயே மிகப்பிரீதிகரமானது. அதில் இளையது, முதிர்ந்தது, அழுகியது, நீண்டது, வெடித்தது, சிகையில்லாதது, நீர்வற்றியது, தேரை என்னும் நோய்மேய்ந்தது, முன்னொன்றிற்குபயோகித்தது ஆகிய இக்குற்றங்களின்றி யௌவனப்பருவமுடைய தேங்காயே கடவுளுக்கு நிவேதித்தல் வேண்டும்—என்னை! இளையது பாலாரிஷ்டத்தையும், முதிர்ந்ததுப்ராணிநஷ்டத்தையும், அழுகியது இராச நாசத்தையும, நீண்டது சசியநாசத்தையும், வெடித்தது மகாமாரிபயத்தையும, சிகையில்லாதது அபமிர்த்துவையும, நீரில்லாதது அநாவிருஷடியையும். தேரைஎன்னும் நோய்மேய்ந்தது கலகத்தையும், முன்னொன்றிற்குப்யோகித்தது பலரோகங்களையும் பயக்கும். யௌவனமுடையது ஆயுராரோக்கியாபிஷடங்களைத்தரும். அத்தேங்காயைச் சுத்திசெய்து இடக்கையில்வைத்துச் சிகைப்பக்கத்தை அங்குஷ்டவிரலினாலும் நடுப்பாகத்தை அநாமிகை விரலினாலும் பற்றி எஞ்சியவிரல்களை நீட்டித் "திரியம்பக" மந்திரத்தினால் ஒரேமுறையில் இரண்டு சமபாகமாக உடைத்தல்வேண்டும் சமபாகமாக உடைந்தால் உத்தமோத்தமம் முக்காற்பாகம சிகைப்பக்கமிருக்க உடைந்தால் மத்திமம் முக்காற்பாகம் பிற்பக்கத்திருக்க உடைந்தால் கலகமுண்டாம். சிகைக்குள் வெடித்தால எடுத்தகருமக் கேடுண்டாம். மற்றக்கண்ணுள் வெடித்தால எசமானுக்கு ஆகாது. பலதுண்டுகளாக உடைந்தால் தநதானியநாசத்தோடு காரியஹானியு முண்டாம்] தினைமா, தேன், முக்கனி, அபபம, அவல், எள்ளுண்டை, நெற்பொரி, பால், பாகு, வள்ளிக்கிழங்கு, கடலை, பயறு, மோதகா முதலியவற்றை ஏற்றருளி அத்தேவர்கள் வேண்டுகோளின்படி துதிக்கையைத்தூக்கி ஒற்றைப்பாதத்தைக் குஞ்சிதமாக்கி அங்குசம் பாசமேந்திய கைகளைத் தொங்கவிட்டு ஒருமுகூர்த்தகாலம் திருநடனஞ்செய்தருளினர். அப்போ விஷ்ணு முதலிய தேவர்கள் முனிவர்கள் மற்றைய சராசரங்கள் எல்லாம் அக்கட

பின் பிரதக்ஷிணஞ்செய்தல்வேண்டும் பிரதக்ஷிணம் என்பதின் பொருள். ப்ர-சாவபயநாசம். த-மோக்ஷஸித்தி. க்ஷி-ரோகநாசம். ண-லக்ஷ்மீகரம(அம்சுமதி.) பிரதக்ஷிணஞ் செய்யும்விதியாவது-ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபம்செய்துகொண்டும், இரண்டு கைகளையும் இருதயத்திலே குவித்துக்கொண்டும், பூரணகர்ப்பிணியானவள் காலிலே இருங்கயவிலங்கு பூட்டப்பட்டவளாய எண்ணெ நிறைந்தவாயகன்ற பாத்திரத்தைச் சிரசினமேல் வைத்துக்கொண்டும் நடத்தல் போலப் பூமியைப்பார்த்துக்கொண்டு கால்களை மெல்லவைத்துப் பிரதக்ஷிணம் பண்ணுக.

விநாயகக்கடவுள் உற்சவம் கொண்டருளும் போது சுவாமிக்குப் பின்னே பிரதக்ஷிணஞ்செய்வோர் ஒரு அடிக்கு ஒரு அஸ்வமேதயாக பலனை அடைவர்.

இறுதியில் விபூதி முதலியனவாங்கிக்கொண்டு, சண்டேசுரரை வணங்கி. பலிபீடத்துக்கு இப்பால் வந்து நமஸ்கரித்து, பஞ்சாக்ஷரத்தில் இயன்ற உருச்செபித்து எழுந்து வீட்டுக்குப்போகக்கடவர்.

விநாயக பரசிவத்தை வழிபட்டு இம்மை மறுமைப் பேறுகளைப் பெற்ற தேவர்கள், முனிவர்கள், சக்கிரவர்த்திகள் முதலியவர்களினுடைய சரித்திரங்களைச் சொல்லப் புகுந்தால் "பலகோடியில்லையோ யாமிருந்து சொன்ன பொழுதே தொலையுமோ" ஆதலின் விடுத்தாம் விரித்த நூல்களுட்காண்க.

இதுகாறுங் கூறியவற்றால் சர்வதேவதாஸ்வாமியாகிய விநாயகக் கடவுளே முழுமுதற்பெருமானென்பது இனிதுபெறப்பட்டது. அம்முழுமுதற் பெருமானைப் பேரன்போடு மனம் வாக்குக் காயங்களினால் வழிபட்டு முத்தியின்பம் பெறும்பொருட்டே அக்கடவுள் இவ்வரிய மானுடப் பிறவியை நமக்குத் தந்தருளினார், அவரே பெத்த நிலை முக்தி நிலை இரண்டினும் நம்மோடு தொடர்புடையவராய். நமக்கு நம்மினுமினியவராய் உள்ளவர்; அவருக்கே நாமெல்லாம் உடைமைப் பொருள்; அவருக்கே நாமெல்லாம் அன்புசெய்தல் வேண்டும். அவ்வாறு மெய்யன்புசெய்வோமாயின் வேண்டுவார் வேண்டியதேயீயும் பரமகிர்பாளுவாகிய விநாயகக்கடவுள் கல்வி, செல்வம். சற்புத்திரப்பேறு தீர்க்காயுசு. சத்துருஜயம். இராஜ வசியம் முதலிய அபீஷ்டங்களைத் தந்து பின் நிரதிசயானந்தத்தில் என்றும் இருக்கும்படிசெய்தருளுவார்.

ஆதிசங்கரா சாரியஸ்வாமிகள் அருளிச்செய்தது,

"ஸ்ருதாபாலநுபாபி விக்நாத்ரி ஹர்த்ரீ
மஹாதந்தி வக்த்ராபி பஞ்சாஸ்ய மான்யா
விதீந்த்ராதி ம்ருக்யா கணேசாபிதாமே
விதத்தாம் ஸ்ரியம் காபி கல்யாணமூர்த்தி:"

---

☞ இப்புத்தகம் வேண்டிய உள்ளூரவர்கள் யாழ்ப்பாணம் மத்திய மானிப்பாயில் "ருக்மிணீ வித்தியாசாலை"யில் விலையின்றிப் பெற்றுக்கொள்க. பிறவூரவர்கள் தபாற்செலவு மாத்திரம் அனுப்பிப் பெற்றுக்கொள்க.